15506

OL/2017/42-T-I,II (NEW)

සියලු ම හිමිකම් ඇවිරිණි / முழுப் பதிப்புரிமையுடையது / All Rights Reserved]

නව නිර්දේශය/புதிய பாடத்திட்டம்/New Syllabus

NEW

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

42 T I, II

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2017 දෙසැම්බර්
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2017 டிசெம்பர்
General Certificate of Education (Ord. Level) Examination, December 2017

කර්ණාටක සංගීතය I, II
கர்நாடக சங்கீதம் I, II
Carnatic Music I, II

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
Three hours

## கர்நாடக சங்கீதம் I

**கவனிக்க :**

(i) **எல்லா** வினாக்களுக்கும் விடை எழுதுக.
(ii) **1** தொடக்கம் **40** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிலும் (1), (2), (3), (4) என இலக்கமிடப்பட்ட விடைகளில் **சரியான** அல்லது **மிகப் பொருத்தமான** விடையைத் தெரிவுசெய்க.
(iii) **உமக்கு வழங்கப்பட்டுள்ள விடைத்தாளில் ஒவ்வொரு வினாவுக்கும் உரிய வட்டங்களில் உமது விடையின் இலக்கத்தை ஒத்த வட்டத்தினுள்ளே புள்ளடியை (×) இடுக.**
(iv) அவ்விடைத்தாளின் பிற்பக்கத்தில் தரப்பட்டுள்ள மற்றைய அறிவுறுத்தல்களையும் கவனமாக வாசித்து, அவற்றைப் பின்பற்றுக.

**1.** குறிஞ்சி இராகம் ஒரு
(1) நிஷாதாந்திய இராகம் (2) பஞ்சமாந்திய இராகம் (3) வக்ரஷாடவ இராகம் (4) தைவதாந்திய இராகம்

**2.** 'சங்கிரக சூடாமணி' என்ற நூலை இயற்றியவர்
(1) கோவிந்தாசாரியார் (2) வேங்கட மகி
(3) மதங்கர் (4) சாரங்க தேவர்

**3.** வாத்திய த்ரயத்தில் இரண்டாவதாக இடம்பெறும் வாத்தியம்
(1) வயலின் (2) புல்லாங்குழல் (3) நாதஸ்வரம் (4) வீணை

**4.** சந்தப் பாவலர் பெருமான் என சிறப்புப் பெயர்பெற்றவரால் இயற்றப்பட்ட உருப்படி
(1) தில்லானா (2) திருப்புராணம் (3) சந்ததாள தேவாரம் (4) திருப்புகழ்

**5.** வில்லுப்பாட்டு நிகழ்ச்சியில் இடம்பெறும் வாத்தியங்கள்
(1) கடம், ஓர்கன் (2) தவில், புல்லாங்குழல்
(3) ஹார்மோனியம், விற்கடம் (4) உடுக்கை, வயலின்

**6.** 'உற்றுமை சேர்வது' என்னும் தேவாரம் அருளப்பட்ட தலம்
(1) திருப்பிரமபுரம் (2) சீர்காழி (3) திருவாலங்காடு (4) திருவீரட்டானம்

**7.** சேக்கிழார் சுவாமிகளால் அருளப்பட்ட பெரியபுராணம் பாடப்படும் இராகத்திற்கு இணையான பண்
(1) காந்தாரம் (2) நட்டராகம் (3) தக்கேசி (4) செந்துருத்தி

**8.** தகதிமிதகிட (4 + 3) என்ற நடையில் அமைந்த விலோம சாபு தாளத்தில் கிருதிகளை இயற்றியவர்
(1) முத்துத்தாண்டவர் (2) சியாமா சாஸ்திரிகள்
(3) முத்துஸ்வாமி தீக்ஷிதர் (4) பச்சிமிரியம் ஆதியப்பய்யர்

**9.** தியாகராஜ சுவாமிகளின் கிருதிகளுக்கு ஒப்பான ரஸம்
(1) திராட்சை ரஸம் (2) கதலி ரஸம் (3) நாளிகேர ரஸம் (4) கான ரஸம்

**10.** ஸட்ஜம், சதுஸ்ருதி ரிஷபம், சாதாரண காந்தாரம், சுத்தமத்யமம், பஞ்சமம், சதுஸ்ருதி தைவதம், கைசிகி நிஷாதம் என்னும் ஸ்வரஸ்தானங்களையுடைய இராகம்
(1) மாயாமாளவகௌளை (2) ஹரிகாம்போஜி (3) கரஹரப்ரியா (4) கல்யாணி

[பக். 2 ஐப் பார்க்க

Department of Examinations Sri Lanka

11. பண் - பழந்தக்கராகத்திற்கு இணையான கர்நாடக இராகம்
(1) பைரவி (2) ஆரபி (3) ஆஹிரி (4) சங்கராபரணம்

12. ஸாரணி, மந்திரம், பஞ்சமம், அனுமந்திரம் என்னும் நான்கு வாசிப்புத் தந்திகளைக் கொண்ட வாத்தியம்
(1) வயலின் (2) தம்புரா (3) வீணை (4) ஸித்தார்

13. $\overset{|}{8}$ - என்னும் குறியீட்டினால் குறிக்கப்படும் அங்கம்
(1) குரு (2) அனுத்ருதம் (3) காகபாதம் (4) புலுதம்

14. கீர்த்தனை ஓர்/ஒரு
(1) அப்பியாசகான உருப்படி
(2) மாலை வேளைகளில் மட்டும் பாட உகந்த உருப்படி
(3) சபாகான உருப்படி
(4) கீதத்திற்கு அடுத்ததாகக் கற்பிக்கப்படும் உருப்படி

15. 72 மேளகர்த்தா அமைப்பில் 7ஆவது, 9ஆவது சக்கரங்களின் பெயர்கள் முறையே
(1) அக்னி, ரிஷி (2) ரிஷி, ப்ரஹ்ம
(3) வஸு, ப்ரஹ்ம (4) ரிஷி, ருது

16. "இனி நமக்கொரு கவலையுமில்லை..." என்னும் கீர்த்தனை அமைந்துள்ள இராகத்தின் தாய்ராகம்
(1) கரஹரப்ரியா (2) மாயாமாளவகௌளை (3) ஹரிகாம்போஜி (4) சங்கராபரணம்

17. ஸரபநந்தன தாளத்தில் பல்லவி பாடிய வாக்கேயகாரர்
(1) தியாகராஜ சுவாமிகள் (2) முத்துஸ்வாமி தீக்ஷிதர்
(3) சியாமா சாஸ்திரிகள் (4) புரந்தரதாஸர்

18. சங்ககாலத்திலிருந்த உலகியல் சார்ந்த இசை, பக்தி இசையாக மறுமலர்ச்சி கண்டது
(1) சோழர் காலத்தில் (2) பல்லவர் காலத்தில்
(3) நாயக்கர் காலத்தில் (4) வேதகாலத்தில்

19. தவில் வாத்தியக் குழுவினரால் திருமண நிகழ்ச்சிகளில் தாலி கட்டும்போது எழுப்பப்படும் உரத்த இசை
(1) மல்லாரி (2) பெரியமேளம் (3) கெட்டிமேளம் (4) சின்னமேளம்

20. தமிழ்ப் பதங்கள் இயற்றிய வாக்கேயகாரர்கள்
(1) கஸ்தூரி ரங்கர், முத்துத்தாண்டவர் (2) க்ஷேத்ரக்ஞர், கவிக்குஞ்சர பாரதி
(3) மாம்பழக் கவிராயர், சாரங்கபாணி (4) கவிக்குஞ்சர பாரதி, கனம் கிருஷ்ணய்யர்

21. மேலைத்தேய இசையில் பயன்படுத்தப்படும் வாத்தியங்களாவன
(1) கிற்றார், ஓர்கன் (2) பியானோ, தபேலா
(3) வயலின், ஓர்கன் (4) தம்புரா, ஹார்மோனியம்

22. பாபநாசம் சிவனால் இயற்றப்பட்ட கீர்த்தனைகளுள் ஒன்று
(1) ஸ்ரீ ராஜராஜேஸ்வரி... (2) இனி நமக்கொரு...
(3) உள்ளமிரங்கி... (4) மாயன் குழல் இசையில்...

23. ஹரிகாம்போஜி இராகத்தின் ரிஷபத்தை கிரகபேதம் செய்யும்போது உண்டாகும் இராகம்
(1) கல்யாணி (2) கரஹரப்ரியா (3) தோடி (4) நடபைரவி

24. 'சங்கீர்ண' என்ற விருதைப் பெற்ற பல்லவர் காலத்து மன்னன்
(1) மகேந்திர வர்மன் (2) நின்றசீர் நெடுமாறன் (3) ராஜராஜ சோழன் (4) வரகுண பாண்டியன்

25. முத்துஸ்வாமி தீக்ஷிதர் கோவிலூர் இறைவன் மீது கதவு திறக்கப் பாடிய கிருதி
(1) ஆனந்தாம்ருத வர்ஷினி (2) அக்ஷயலிங்கவிபோ
(3) சம்போமஹாதேவா (4) சியாம சுந்தராங்க

26. ஐந்து அங்கங்களைக் கொண்ட உருப்படி
(1) கீர்த்தனை (2) இராகமாலிகை
(3) வர்ணம் (4) ஸ்வரஜதி

[பக். 3 ஐப் பார்க்க

Department of Examinations Sri Lanka
Department of Examinations Sri Lanka

27. தியாகராஜ சுவாமிகள் ஸ்ரீ ராம பட்டாபிஷேகக் காட்சியைக் கண்ட பின்னர் பாடிய அடாணா இராகக் கீர்த்தனை
(1) நன்னு பாலிம்ப... (2) தெரதீயகராதா... (3) ஈவஸுதா நீவண்டி... (4) பாலகனகமய...

28. தேவாரப் பதிகங்களை பண் முறையில் பாடிப் பரவச்செய்தவர்கள்
(1) ஆழ்வார்கள் (2) ஓதுவார்கள் (3) வாக்கேயகாரர்கள் (4) வைணீகர்கள்

29. 'கஞ்சதளாயதாக்ஷி' என்னும் முத்துஸ்வாமி தீக்ஷிதரின் கிருதி அமைந்துள்ள இராகம்
(1) கமலா மனோஹரி (2) மாயாமாளவகௌளை (3) சங்கராபரணம் (4) எதுகுலகாம்போதி

30. கண்டஜாதி மட்டியதாளத்தின் மொத்த அட்சர எண்ணிக்கையைக் கொண்ட பிறிதொரு தாளம்
(1) திஸ்ரஜாதி துருவதாளம் (2) மிஸ்ரஜாதி திரிபுடைதாளம்
(3) சதுஸ்ரஜாதி அடதாளம் (4) சதுஸ்ரஜாதி ஜம்பைதாளம்

31. தனது இசை நாடகங்களில் ஆனந்தக் களிப்பு, இருசொல் அலங்காரம் ஆகிய இசை வடிவங்களைக் கையாண்ட வாக்கேயகாரர்
(1) முத்துத்தாண்டவர் (2) பாபநாசம் சிவன்
(3) கோபாலகிருஷ்ண பாரதியார் (4) மகாவைத்தியநாதய்யர்

32. ஸா;; நிதபதநி, தபமா; - என்னும் ஸ்வர ஸஞ்சாரம் எடுத்துக்கொள்ளும் மொத்த அட்சரங்களின் எண்ணிக்கை
(1) 16 (2) 18 (3) 20 (4) 22

33. 'பிரகலாத பக்தி விஜயம்' என்ற இசை நாடகத்தை இயற்றியவர்
(1) முத்துஸ்வாமி தீக்ஷிதர் (2) தியாகராஜ சுவாமிகள் (3) புரந்தரதாஸர் (4) சியாமா சாஸ்திரிகள்

34. கபதஸ்நித பதநிபதபா - என்னும் ஸ்வர ஸஞ்சாரத்தினை எடுத்துக் கொள்ளும் இராகம்
(1) ஆரபி (2) பிலஹரி (3) சுத்தஸாவேரி (4) மத்தியமாவதி

35. அபகாரநிந்தைபட்டுழலாதே... என்னும் திருப்புகழ் பாடப்பட்ட தலம்
(1) திருச்செந்தூர் (2) பழநி (3) திருவாவினன்குடி (4) பழமுதிர்ச்சோலை

36. 'சிவகாம சுந்தரி' என்ற முகாரி இராகக் கிருதியின் எடுப்பு
(1) அதீத எடுப்பு (2) சம எடுப்பு (3) அனாகத எடுப்பு (4) ஆகத எடுப்பு

37. கல்லினாலான நாதஸ்வரங்கள் காணப்படும் கோவில்கள்
(1) திருவையாறு, திருவண்ணாமலை
(2) தஞ்சைப் பெருங்கோயில், கும்பகோணம் கும்பேஸ்வரர்
(3) திருச்செந்தூர், திருவண்ணாமலை
(4) கும்பகோணம் கும்பேஸ்வரர், ஆழ்வார் திருநகரி

38. பின்வரும் கூற்றுகளைக் கருதுக.
A - இது ஒரு ஸ்திர வாத்தியம்
B - நான்கு ஸ்தாயிகள் வரை வாசிக்கக்கூடிய வாத்தியம்
C - மிகத் துரித காலங்களில் வாசிக்க இயலாத வாத்தியம்
D - வில் போட்டு வாசிக்கப்படும் வாத்தியம்
E - டி. என். கிருஷ்ணன் இவ் வாத்தியத்தை வாசித்துப் பிரபல்யம் அடைந்தார்.
மேற் கூறப்பட்ட கூற்றுகளில் வயலின் வாத்தியம் பற்றிய சரியான கூற்றுகள்
(1) ABC (2) ACD (3) BCD (4) BDE

39. பின்வருவனவற்றுள் பதம் என்னும் உருப்படிக்குப் **பொருத்தமற்ற** கூற்று
(1) இது இசைக்கச்சேரிகளில் பாடப்படும் ஒரு சபாகான உருப்படியாகும்.
(2) இது நட்டியக் கச்சேரிகளில் முதல் உருப்படியாக இடம்பெறும்.
(3) இது நயக, நாயகி பாவத்தை கொண்ட சிருங்கார ரஸத்தை வெளிப்படுத்தும்.
(4) இது பல்லவி, அனுபல்லவி, சரணம் என்னும் அங்கங்களை உடையது.

40. ஹிந்துஸ்தான் இசை நிகழ்ச்சிகளை இரசித்து அனுபவித்தவற்றை விமர்சிக்கும்போது அவதானிக்க வேண்டிய முக்கிய அம்சங்கள்
(1) வயலின் வாத்தியம், வீணை வாத்தியம் என்பவற்றின் ஒத்திசைவு, நிகழ்ச்சியின் தரம்
(2) நிகழ்ச்சியின் தரம், வாத்தியங்களின் பங்கு, இரசித்தலால் பெறும் அனுபவம்
(3) தபேலாவின் ஒத்திசைவு, மிருதங்கத்தின் ஒத்திசைவு, பாடலின் தரம்
(4) கிற்றார் வாத்தியத்தின் தரம், தபேலா வாத்தியத்தின் தரம், வாத்தியங்களின் ஒத்திசைவு

* *



Department of Examinations Sri Lanka
Department of Examinations Sri Lanka

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව / முழுப் பதிப்புரிமையுடையது / All Rights Reserved]

නව නිර්දේශය/புதிய பாடத்திட்டம்/New Syllabus

NEW

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

42 T I, II

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2017 දෙසැම්බර්
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2017 டிசெம்பர்
General Certificate of Education (Ord. Level) Examination, December 2017

කර්ණාටක සංගීතය I, II
கர்நாடக சங்கீதம் I, II
Carnatic Music I, II

## கர்நாடக சங்கீதம் II

**கவனிக்க :**
※ **முதலாம்** வினாவையும் வேறு **நான்கு** வினாக்களையும் தெரிவுசெய்து எல்லாமாக **ஐந்து** வினாக்களுக்கு மாத்திரம் விடை எழுதுக.

**1.** பின்வரும் வினாக்களுக்குச் சுருக்கமான விடை எழுதுக.

(i) பல்வேறு வகையான இசைக்கருவிகள் ஒன்றாக இணைந்து இசைக்கப்படும் நிகழ்ச்சியின் சிறப்புப் பெயர் யாது ?

(ii) ஹிந்துஸ்தானி இசையின் பிரதான தாள வாத்தியம் யாது ?

(iii) பொன் ஸ்ரீ வாமதேவன் அவர்களால் இயற்றப்பட்ட இலட்சணகீதம் யாது ?

(iv) கனராக பஞ்சரத்ன கீர்த்தனைகளை தெலுங்கு மொழியில் இயற்றியவர் யார் ?

(v) T.R. மகாலிங்கம் எவ்வாத்தியத்தினை வாசித்துப் பிரபல்யமடைந்தார் ?

(vi) திருப்பல்லாண்டினை அருளிய நாயனார் யார் ?

(vii) பஜனைப் பத்ததியின் தந்தை என அழைக்கப்படுபவர் யார் ?

(viii) "சபாபதிக்கு வேறு தெய்வம்..." என்னும் ஆபோஹி இராகக் கீர்த்தனையை இயற்றியவர் யார் ?

(ix) அக்னி-கோ, திசி-மா என்னும் ஸங்க்ய ஸங்கேதாட்சரங்களால் குறிப்பிடப்படும் இராகங்கள் முறையே யாவை ?

(x) நவரோஜ் இராகத்திற்கு இணையான **இரண்டு** பண்களைத் தருக.

**2.** பின்வரும் இராகங்களுள் விரும்பிய ஓர் இராகத்தின் இலட்சணத்தை விரிவாகத் தருக.
(உருப்படிகள், சஞ்சாரங்கள் என்பன எழுதப்படல் வேண்டும்).

(i) பந்துவராளி

(ii) மத்யமாவதி

(iii) தோடி

**3.** பின்வருவனவற்றுள் விரும்பிய ஒன்றினைப் பற்றி விரிவான விளக்கத்தைத் தருக.
(இயற்றியவர் பெயரையும் உதாரணங்களையும் தெரிவுசெய்த விடயத்திற்கேற்ப குறிப்பிடல் வேண்டும்).

(i) இராகமாலிகை

(ii) சாபுதாளம்

(iii) விவாதி மேளங்கள்

**4.** (i) மிருதங்க வாத்தியத்தின் படத்தினை வரைந்து பாகங்களைக் குறிப்பிடுக.

(ii) இவ்வாத்தியத்தின் சிறப்புகள் **இரண்டினைத்** தருக.

(iii) இவ்வாத்தியத்தின் அமைப்பினை விளக்குக.

(iv) இவ்வாத்தியத்தினை சுருதி சேர்க்கும் முறை பற்றி விளக்குக.

[பக். 5 ஐப் பார்க்க

Department of Examinations Sri Lanka

Department of Examinations Sri Lanka

155015

**5.** முத்துத்தாண்டவரின் வாழ்க்கை வரலாற்றினையும் அவரது இசைப் பணிகளையும் பின்வரும் விடயங்களின் கீழ் ஆராய்க.

(i) வாழ்க்கைக் காலம்

(ii) பிறந்த இடம்

(iii) இளமைக் காலம்

(iv) வாழ்க்கைச் சம்பவங்கள்

(v) இவர் இயற்றிய உருப்படிகள் **நான்கு**

(vi) இவரது உருப்படிகளின் சிறப்புகள் **இரண்டு**

**6.** பின்வரும் அலங்காரத்தினைப் பூர்த்தி செய்க.

| | | | | |
|---|---|---|---|---|
| $|_5$ | | O | | $|_5$ |
| ஸரிகம | / | கரி | / | ஸாரிகம // |

**7.** கர்நாடக சங்கீதத்தில் இசைக் குறியீடுகளின் முக்கியத்துவத்தினைக் கூறி அவற்றுள் ஸ்தாயிக் குறியீடுகள், இதர இசைக் குறியீடுகள் பற்றி விரிவாகத் தருக.

**அல்லது**

இந்தியாவில் கர்நாடக இசை வரலாற்றில் 16ஆம், 17ஆம் நூற்றாண்டின் கலாசாரப் பின்னணி பற்றி ஆராய்க.

***

Department of Examinations Sri Lanka
Department of Examinations Sri Lanka

